*Nam nāṭu*

*Malar 4, itaḻ 224 [i.e. 223]*

*February 27, 1957*

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630'

# நம் நாடு




The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F

மலர் 4] சென்னை: மாசி 16உ புதன் (27—2—57) ★ ★ வெளியூர்: மாசி 17உ வியாழன் (28—2—57) [இதழ் 224

## பிரிட்டிஷ் டெலிவிஷனில் இந்தியத் தேர்தல்!

★

புதுடில்லி, பிப். 25—

இந்தியாவில் நடைபெற இருக்கிற பொதுத்தேர்தல்களை பிரிட்டனிலுள்ள மக்கள் அனைவரும் 10 நிமிடநேர டெலிவிஷன் ஒலிபரப்பின் மூலம் காணப்போகிறார்களாம்!

பிரிட்டிஷ் ஒலிபரப்பு நிலையம் இதனை ஏற்பாடு செய்திருப்பதாகவும், வாக்குப்பதிவு நடைபெறும் முக்கிய இடங்களிலிருந்து தரப்படும் டெலிவிஷன் பதிவுகள் அனைத்தும் இதில் இடம்பெறுமென்றும் தகவல் தரப்பட்டிருக்கிறது.

# காமராசர் யாருக்கு நல்லவர்? எப்படி நல்லவர்?

## அவரால் நாட்டு மக்களுக்கு ஏற்பட்ட நன்மைகள் என்ன?

## காமராசரை ஆதரிப்போருக்கு அண்ணா கேள்வி

"காமராசர் நல்லவர் என்கிறார் பெரியார்; ஆனால் நான் தெரிந்து கொள்ள விரும்புவது, நல்லவர் என்பதற்கு இலக்கணம் என்ன? காமராசர் நல்லவர் என்றால், எதில் நல்லவர்? யாருக்கு நல்லவர்? எப்படி நல்லவர்? அதனால் நாட்டுக்கு என்ன இலாபம் என்பவைதான்!

"கடைக்காரச் செட்டியாரை நல்லவர் என்கிறார், கோவில் குருக்கள்; காரணம், 'செட்டியார் வெள்ளிதோறும் அம்மனுக்கு அர்ச்சனை செய்கிறார்; தேங்காய்-பழம் படைக்கிறார்' என்பதால் குருக்கள், செட்டியாரை நல்லவர் என்கிறார்!

"மார்வாடி, செட்டியாரை நல்லவர் என்கிறார்; காரணம், தன்னிடம் வாங்கிய கடனுக்கு செட்டியார், மாதம் தவறாமல் வட்டி கட்டி விடுகிறார் என்பதால்!

"ஆனால், ஊராருக்குச் செட்டியார் எப்போது நல்லவராக இருக்க முடியும்? அவர் கடையில், வீசைக்கு 40 பலம் குறையாமல் சரக்கு கிடைக்கிறது; கடைச் சரக்கு புழுத்துப் போகாமல் இருக்கிறது; ஆறணாச் சாமானில் காலணாத்தான் இலாபம் வைத்து விற்கிறார் என்ற நிலையிருந்தால்தானே செட்டியார், ஊராருக்கு நல்லவராயிருக்க முடியும்?

"அதுபோல காமராசர் நல்லவர் என்றால், யாருக்கு நல்லவர்? 'சுந்தரவடிவேலுவுக்கு உத்தியோகம் தந்தார்—அதனால் நல்லவர்' என்கிறார்கள்; சுந்தரவடிவேலுவுக்கு உயர்ந்த உத்தியோகம் தந்ததிற்கு வேண்டுமானால், சுந்தரவடிவேலு குடும்பத்தார் சொல்லலாம்—'காமராசர் நல்லவர்' என்று!

"ஆனால் சுந்தரவடிவேலுவுக்கு உயர்பதவி தந்ததாலேயே காமராசர் எப்படி, வண்டியோட்டும் வரதனுக்கும், குப்பை கூட்டும் குப்பனுக்கும் நல்லவராகிவிட முடியும்?

"காமராசர் எதில் நல்லவர்? தமிழ்மொழியைக் காப்பதில், வளர்ப்பதில் நல்லவரா காமராசர்? தமிழர்தம் உரிமைகளைக் காப்பாற்றுவதில் நல்லவரா காமராசர்? தமிழ்நாட்டின் எல்லைகளைக் காப்பதில் நல்லவராக இருந்தாரா காமராசர்? இல்லையே!

"தேவிகுளம், பீர்மேடு முதலிய தமிழ் வட்டங்கள் தமிழ்நாட்டிற்கு இல்லையென்றால் நான் என் பதவியைத் துறப்பேன்—என்று, உண்மையாகக்கூட அல்ல—ஒப்புக்காகவேனும் காமராசர் மிரட்டியிருந்தால், தேவிகுளம்-பீர்மேடு கிடைக்கிறதோ இல்லையோ, 'காமராசர் தமிழர்களுக்காகப் பரிந்து பேசினார்' என்றேனும் கூற முடியுமே! கூறினாரா, காமராசர்? ஒப்புக்காகக்கூட, 'பதவியைத் துறப்பேன்' என்று சொல்ல விரும்பாதவர், எப்படித் தமிழருக்கு நல்லவராக இருக்க முடியும்?"

*—என்று அண்ணா அவர்கள், சென்னை-சிந்தாதிரிப்பேட்டையில், 23-2-57 அன்று நடைபெற்ற கூட்டம் ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்; அவரது சொற்பொழிவின் முதற் பகுதி நேற்றைய இதழில் வெளிவந்திருக்கிறது; மற்றொரு பகுதி இங்கு தரப்படுகிறது:—*

"சுந்தரவடிவேலுவுக்கு உயர்ந்த உத்தியோகம் தந்ததாலேயே காமராசர் நல்லவர் என்றால், ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் நல்லவரல்லவா?

"ஓமந்தூர் இராமசாமி அவர்கள்தானே, சோமசுந்தரம் அவர்களை ஐகோர்ட் நீதிபதியாக்கினார். இவரை நீதிபதியாக்கவேண்டுமென ஓமந்தூரார் சிபாரிசு செய்தபோது அதை ஏற்றுக்கொள்ள டில்லி தயங்கியபோது ஓமந்தூரார், 'பதவியை இராஜிநாமாச் செய்துவிடுவேன்' என்று மிரட்டிப் போராடியல்லவா சோமசுந்தரத்தை நீதிபதியாக்கினார்? அவர், தனது செயலாளராக யாரை வைத்துக்கொண்டார்? அழகிரிசாமி நாயுடு என்ற பார்ப்பனரல்லாதவரையல்லவா? அப்படியிருந்தும் அவரை ஏன் எதிர்த்தோம்? 'சத்திய சந்தர் ஓமந்தூரார்' என்று தெரிந்ததும், நாம் அவரை எதிர்த்தது எதனால்?

"எனவே, தோழர்களே! காமராசரை நல்லவர் என்று சொல்லுகிற பெரியார், தமிழ் நாட்டுப் பகுத்தறிவுத் தந்தை பெரியார் அல்ல!

"உயர்ந்த உத்தியோகம் தருகிறவர்களை எதிர்க்கவே கூடாது என்றால், நாம் அரசியலிலேயே இருக்க முடியாதே!

"நீதிக் கட்சிதான், தமிழனுக்குக் கோட்டுப் போடவும், ஷர்ட் அணியவும் கற்றுக் கொடுத்தது. தமிழனுக்கு உத்தியோகம் வேண்டுமெனப் போராடிப் பெற்றுத் தந்தது; ஆனால் அந்த நீதிக் கட்சியையே நாம் எதிர்க்கவில்லையா?

"கோகலே மண்டபத்தில் நடைபெற்ற மாநாடு ஒன்றில், அன்றைய நாளில் பெரியார் அவர்கள் என்னிடம் கூறினார்—'என்ன - (என். பி. - N. B.) பார்ப்பனரல்லாதார், பார்ப்பனரல்லாதார் என்றே பேசுகிறார்கள்; 'என். பி.' என்றால் என்ன தெரியுமா? 'நோ பிரெயின்' (No Brain) என்பதுதான்'—என்று, பெரியார் அவர்கள் கூறினார்.

"அப்படியிருக்க, இன்று சுந்தரவடிவேலுவுக்கு உத்தியோகம் தந்தது எப்படி தமிழ் நாட்டிற்கு நலன் பயப்பதாகும் — தேர்தல் காலத்து மாமந்திரமாக முடியும்?

"குமாரசாமி இராசாவை ஏன் எதிர்த்தோம்? அவர் காலத்தில் எத்தனை பார்ப்பனரல்லாதார் உயர்ந்த உத்தியோகம் பெற்றனர் என்ற பட்டியல் இல்லாமலா போய்விட்டது? பின் ஏன் அவரை அன்று எதிர்த்தோம்?

"காமராசர், இராசரத்தின முதலியாருக்கு போலீஸ் உயர் பதவி தந்தார்—என்கிறார் பெரியார்; இராசரத்தின முதலியார் என்ன—அதற்கு முன், ஹெட் கான்ஸ்டபிளாக இருந்தவர் போலவும், அவரைப் போலீஸ் தலைமை அதிகாரியாக காமராசர் நியமித்தது போலவும் அல்லவா பேசுகிறார்கள்? இராசரத்தினத்திற்கு அந்த உத்தியோகத்திற்கு வரத் தகுதியான அனுபவமும் திறனும் இருக்கத்தானே இருந்தது?

"மேலும், பார்த்தசாரதி அய்யங்காருக்கு அந்த உத்தியோகத்தைக் காமராசர் தரமறுத்தற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. ஆச்சாரியார் கவர்னர்—ஜெனரலாக இருந்தபோது சென்னைக்கு வந்தார்; விமான நிலையத்தில் அவரைப் பலரும் வரவேற்றனர்; அதிகாரிகள் பலரும் அவருக்கு அறிமுகப் படுத்தப்பட்டனர். அப்போது காமராசர், 'கக்கன்' வேலை பார்த்துக்கொண்டிருந்தார்; அவரும் விமான நிலையத்திற்குச் சென்றார்; உள்ளே போக விரும்பினார்; பார்த்தசாரதி அய்யங்கார் நகரப்போலீஸ் அதிகாரி என்ற முறையில், அவரை உள்ளேவிட மறுத்தார்; காமராசர் 'நான் யார் தெரியுமா?' என்றார். 'தெரிந்துதான் உள்ளே போகக்கூடாது என்கிறேன்,' என்றார், பார்த்தசாரதி அய்யங்கார்!

"அந்த நிகழ்ச்சியை மனதில் வைத்துக்கொண்டுதான் காமராசர் பார்த்தசாரதி அய்யங்காரை, தான் முதன் மந்திரியாக வந்தபோது பழி வாங்கிக்கொண்டார்; அவ்வளவுதான்!

"இவ்வாறிருக்க, 'காமராசர் அவருக்கு உயர் உத்தியோகம் தந்தார்; இவருக்குத் தந்தார்,' என்று பேசிப் பயனில்லை!

"தைரியமிருந்தால், காமராசரை சர்க்கார் சார்பில் அறிக்கை விடச் சொல்லுங்கள் — 'எந்த உயர் பதவியும் இனி இந்த ஆட்சியில் பார்ப்பனர்களுக்குத் தரப்படமாட்டாது,'—என்று! முடியுமா காமராசரால்? முடியாதே!

"எனவே, ஓமந்தூராரையும் குமாரசாமி இராசாவையும் எதிர்ப்பதற்கிருந்த நியாயங்களை விட, காமராசரை எதிர்ப்பதற்கு நியாயங்கள் நிரம்ப உண்டு.

"தேவிகுளம் பீர்மேடு தமிழ் வட்டங்களைப் பறிகொடுத்தார் காமராசர்; திருத்தணி எல்லைகள் இன்னும் மீட்கப்படவில்லை, காமராசரால்; ஐந்தாண்டுத் திட்டங்களில் நியாயம் பெற முயற்சிக்கவில்லை காமராசர்; டிராம்வே தொழிலாளர்களைத் தெருவில் நிறுத்தினார் காமராசர்; இப்படிப்பட்ட காமராசரைத்தான் நாங்கள் எதிர்க்கிறோம்.

"பள்ளிக்கூடங்களில் ஏழை மாணவர்களுக்குப் பகல் சோறு போடுகிறார்கள்; 'இது காமராசரால்தான் நடைபெற்றது—' என்று, கீர்த்தி பேசுகிறார்கள். இந்த ஏற்பாடு காமராசர் காலத்திற்கு முன்பே இருந்துவருகிறது. வேண்டுமானால் காமராசர் இந்த வசதியைக் கொஞ்சம் விரிவாக்கியிருக்கலாம்.

"ஆனால், ஏழைக் குழந்தைகளுக்குப் பகல் உணவு தருகிறார்கள் என்ற செய்தி, எனக்குக் காமராசரின் கீர்த்தியைக் காட்டுவதாக இல்லை; மாறாக, நாட்டின் ஏழ்மையை—மக்களின் வறுமையைக் காட்டுவதாகவே உள்ளது.

"மேலும், 'ஆச்சாரியார் மூவாயிரம் பள்ளிகளை மூடினார்; காமராசர் நாலாயிரம் பள்ளிகளைத் திறந்தார்' என்கிறார்கள். ஏற்கனவே மூடியிருந்ததைத் திறந்ததுபோக, புதிதாகத் திறந்தது—பெரியார் கூறுகிறபடி — 1,000 பள்ளிகள் தானே! சரி! ஆச்சாரியார் மூடினாரே, மூவாயிரம் பள்ளிகள்—அந்த மூவாயிரம் பள்ளிகளும், ஓமந்தூரார் திறந்தவைதானே! அப்படி மூவாயிரம் பள்ளிகளைத் திறந்த ஓமந்தூராரை அன்று எதிர்த்துவிட்டு, ஆயிரம் பள்ளி திறந்த காமராசரை ஆதரிப்பது என்ன நியாயம்?

"பெரியார் சொல்லுகிறார்—'நான் காங்கிரசை ஆதரிக்கவில்லை; காமராசரைத்தான் ஆதரிக்கிறேன்' என்கிறார்.

"ஒருநாள் திடீரென பெரியார் இங்கேயுள்ளகச்சாலீசுவரர்கோவிலுக்குச்சென்று ஒரு அரைப்பலம் கற்பூரத்தைக் கொளுத்தினால், பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? பெரியார் சொல்லுகிறார்—'நான் கற்பூரம் கொளுத்தியது உண்மை; ஆனால், ஏன் கொளுத்தினேன் தெரியுமா? கோவில் வாசலில் கற்பூரக் கடை வைத்திருப்பவன் எனக்கு வேண்டியவன்; அவன்பிழைப்பு நடக்க நாம் கற்பூரம் வாங்கவேண்டியிருக்கிறது; அதனால்தான் வாங்கினேன்; வாங்கியதை கச்சாலீசுவரர் கோவிலில்தான் கொளுத்தி வைப்போமே என்று கொளுத்தினேன்,' என்று பெரியார் கூறுகிறார்; எப்படி?

"பெரியார் இப்படிப் பேசி வருவதில் நியாயம் இல்லை; ஆனால் வாதத் திறமை இருக்கிறது; அவ்வளவுதான்."

## காங்கிரஸ் மந்திரிகள் மண்ணைக் கவ்வுகின்றனர்!

புதுடில்லி, பிப். 26—

பிகார் மாநிலத்தில் முசாபர்பூர் தொகுதியில், மாநில சர்க்கார் செய்தி இலாகா அமைச்சர் பகேஷ் பிரசாத் சின்ஹாவை எதிர்த்துப் போட்டியிட்ட பிரஜா சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர் மகாமாயா பிரசாத் சின்ஹா 2,804 வாக்குகள்அதிகமாகப் பெற்று மண்ணைக் கவ்வச் செய்திருக்கிறார்.

இவர், தன்னுடைய சொந்தத் தொகுதியான சாரான் மாவட்டத்தைச் சேர்ந்த மகாராஜ்கஞ்ச் என்ற தொகுதியில் போட்டியிட இருந்தவர்; மேற்படி அமைச்சர் விடுத்த அறைகூவலை ஏற்று, அதன் பேரில் தமது சொந்தத் தொகுதியை விடுத்து அமைச்சரை எதிர்த்துப் போட்டியிட்டாராம்!

இருவரிடையேயும் பலத்த போட்டி ஏற்பட்டதின் விளைவாக, அமைச்சருக்கு ஆதரவாகக் காங்கிரஸ் பெரும்பெரும் தலைவர்களும், பிரதமர் நேரு பண்டிதர், ஆச்சாரியா கிருபளானி, தேபர் ஆகியோரும் கூட இத்தொகுதிக்கு வந்து தீவிரத் தேர்தல் பிரச்சாரம் செய்தனர்.

பிரஜா-சோஷலிஸ்டு உறுப்பினரை எல்லா இடதுசாரி கட்சிகளும் ஆதரித்திருக்கின்றன.

கடந்த 1955 ஆகஸ்டில், பாட்னாவில் நடைபெற்ற போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தையே ஒரு முக்கியப் பிரச்சினையாக முன் வைத்துத் தேர்தல் பிரச்சாரம் செய்தனர். அண்மையில் பீகார் மாநில அமைச்சரவையிலிருந்து இராஜிநாமாச் செய்த ராம் சரித்திர் சிங் என்பார் ம. சோ. கட்சி உறுப்பினருக்கு ஆதரவாக வேலை செய்தவர்களில் முக்கியமானவர் ஆவார்.

## உ.பி.-யில் மத்திய உதவி அமைச்சர்!

உத்திரப் பிரதேச மாநிலத்தில் கைராகார் தொகுதியில் போட்டியிட்ட மத்திய போலீஸ் இலாகா உதவி அமைச்சர் ஜகன் பிரசாத் ரவத் என்பார் தோற்கடிக்கப்பட்டார்.

அவரை எதிர்த்துப் போட்டியிட்ட சுயேச்சை அபேட்சகரும் முன்னாள் மாநில அமைச்சருமான கிருஷ்ணடட் பலிவால் என்பார், அமைச்சரைவிட 5,000 வாக்குகளுக்கு அதிகமாகப் பெற்று வெற்றி பெற்றிருக்கிறார்.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 27—2—57 புதன்


# இப்படி சொன்னவர் யார்?

*எங்கள் முடிவு*

"பிற மாநிலங்களுக்காக என்ன செய்தபோதிலும், சென்னை சம்பந்தப்பட்ட வரையில், இந்த மாநிலத்திற்குள் பிற மாநிலங்களிலிருந்து மில் புடவைகள், துணிகள் இறக்குமதி தடை செய்யப்பட வேண்டும் என்று இப்பொழுது முடிவு செய்துள்ளோம்."

*பயன்படுத்திக் கொள்ளட்டும்*

"பிற மாநிலங்களில் உற்பத்தி செய்யப்படுவனவற்றை அந்தந்த மாநிலங்களே பயன்படுத்திக்கொள்ளட்டும்."

*தனியாக விட்டுவிடுங்கள்*

"எங்களைத் தனியாக விட்டு விடுங்கள்."

*இறக்குமதி செய்யாதீர்*

"நாட்டின் பிற பகுதிகளில் உற்பத்தி செய்த மில் துணிகளையும் புடவைகளையும் இங்கு இறக்குமதி செய்யாதீர்கள்."

*முயற்சிப்போம்*

"எங்களாலானவரை சமாளித்துக் கொள்ள நாங்கள் முயற்சிப்போம்"

*திடநம்பிக்கை*

"துணிகள், புடவைகள் விஷயத்தில் நம் மாநிலத்தைத் தனியாக விட்டுவிட்டால், பெரும் அளவுக்கு இங்கு கைத்தறித் தொழிலை நிலை நிறுத்த முடியும் என்று நான் திடமாக நம்புகிறேன்."

*ஆதரவு அளிப்பர்*

"இந்தக் கோரிக்கையை இந்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தும் விஷயத்தில், சபையினர், அரசாங்கத்திற்கு முழு ஒத்துழைப்பும் ஆதரவும் அளிப்பர் என்று நம்புகிறேன்."

மிகமிகத் தெளிவான நிலைமை விளக்கம் — திட்டவட்டமான பரிகாரம்.

சென்னை மாநிலத்தில் விவசாயத்திற்கு அடுத்த கட்டத்தில் வளர்ந்தோங்கி இருக்கும் தொழில், கைநெசவு.

கைநெசவு ஒன்றை மட்டுமே தங்கள் வாழ்க்கைக்கான அரும் சாதனமாக நம்பிக்கொண்டு, பன்னெடுங்காலமாக இலட்சக் கணக்கான மக்கள் வாழ்ந்து வருகின்றனர்.

அவர்கள் தொழில், அடுத்தடுத்து, ஏற்றம்போல் உயர்ந்தும் வீழ்ந்தும் நிலைபற்றதாக ஊசலாடிக்கொண்டு இருக்கிறது.

அதன் விளைவாக, குறைந்தபட்ச வாழ்க்கை வசதிக்கும் உத்திரவாதமற்ற அபாயகரமான நிலையில் இலட்சக்கணக்கான நெசவாளர்கள் அச்சத்துடன் இருந்துவருகின்றனர்.

தமிழ் நாட்டு நெசவாளர்களின் கைத்திறம் வரலாற்றில் இடம்பெற்று இருக்கிறது.

அக்காலத்தில் பிற நாடுகளுக்குத் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டுள்ள பண்டங்களில் சிறந்த இடம், கைத்தறி ஆடைகளுக்கு வழங்கப்பட்டும் இருக்கிறது.

இன்றும்கூட அந்தத் தொன்மைப் புகழை இழந்துவிடும் நிலையில் நமது கைத்தறி ஆடைகள் இருக்கவில்லை.

புகழ்கூடத்தான் இருக்கிறது —நெசவாளர்களின் கை வண்ணம் விரிந்து—வளர்ந்தோங்கிதான் இருக்கிறது.

கைத்தறி உடைகளின் நேர்த்தி குறித்தும் அவைகளை ஆக்கித்தரும் நெசவாளர் வேலைத்திறம் பற்றியும் குறைத்துப் பேசுகின்றவர் எந்தக் கட்சியிலும் கிடையாது.

இருந்தாலும் தமிழகக் கைநெசவு, விட்டுவிட்டு ஆபத்திற்கு உள்ளாகி வருகிறது.

அப்படி விட்டுவிட்டுவரும் ஆபத்திலிருந்து கைநெசவுத் தொழிலைக் காப்பாற்ற வேண்டும். அப்பொழுதுதான், அத்தொழிலை மட்டுமே நம்பி காலங்கழித்துவரும் நெசவாளர்களைத் துன்பம் தீண்டாமல் பாதுகாப்பது சாத்தியமாகும்.

அவ்வாறு பாதுகாப்பதின் மூலம்தான், இல்லாமைக்கும் கொல் வறுமைக்கும் கொடிய தொத்து நோய்களுக்கும் பலியாவதிலிருந்து நெசவாளர்களைத் தடுத்து வாழ்விக்க முடியும்.

இப்பெருஞ்செயலை — இலட்சக்கணக்கான மக்களுக்கு அரைகுறை உணவளித்துக்கொண்டிருக்கும் நெசவுத் தொழிலைப் பாதுகாக்கும் பெரும் பொறுப்புள்ள பணியை, எவ்வளவு நல்லெண்ணம் படைத்தவர்களாக இருந்தபோதிலும் தனி நபர்களால் மேற்கொள்ள இயலாது.

அதற்குரிய ஆற்றல் அரசியல் கட்சிகளுக்கும் கிடையாது.

நெசவாளர்களுக்கு வாழ்வு தேடித்தர, நெசவுத் தொழிலைப் பேணிவளர்க்க ஆற்றல் பெற்று விளங்குவது ஒரு அரசாங்கமேயாகும்.

அத்தகு அரசாங்கமும் பரிபூரண அதிகாரம் பெற்று விளங்குவதாக இருந்தாக வேண்டும்.

நமக்கும் ஒரு அரசாங்கம் இருக்கத்தான் இருக்கிறது!

நமது அரசாங்கத்துக்கும் அமைச்சர்கள் இருக்கத்தான் இருக்கின்றார்கள்!

அவர்களுக்கும் அறிவுரை கூற, ஆதரவு காட்ட, சட்ட மன்றம் என்ற ஒன்றும் இருக்கத்தான் இருக்கிறது!

அந்த சட்ட மன்றத்திற்கும், தங்கள் பிரதிநிதிகளாகச் சிலரை பொது மக்கள் தேர்ந்தெடுத்து அனுப்பவும் செய்கிறார்கள்.

ஒரு அரசாங்கத்திற்கு இருந்துத்தீரவேண்டிய அங்கங்கள் அனைத்தும் இருந்தும்கூட, நமது நெசவுத் தொழிலுக்கும், அதை நம்பி வாழ்ந்து வருவதைபெவாடிக்கையாகக் கொண்டு காலங்கழித்துவரும் நெசவாளர்களுக்கும் துன்பம் நேரிடாமல் தடுப்பதற்கும், தொல்லைகளை விரட்டியடிப்பதற்கும் முடியாத நிலைமை இருந்து வருகிறது.

நெசவுத் தொழில் நிலையற்ற தன்மையில், தேய்வதாகவும் மீண்டும் உருவாவதாகவும் இருந்து வருகிறது.

தொழிலில் தேக்கம் ஏற்படுகின்றபொழுது, நெசவாளர்கள் தேம்புகின்றனர்.

உதவி! உதவி! என்று நெசவாளர்கள் கூக்குரல் போடுகின்றனர்.

நமது அரசாங்கந்தானே என்று, அரசாங்கத்தின் உதவியை நாடுகின்றனர் நெசவாளர்கள்.

ஆனால் அரசாங்கமோ, நமது நெசவுத் தொழிலைப் பாதுகாத்துக்கொள்ள ஆற்றலற்றதாக இருந்துவருகிறது.

அரசாங்கத்தை நடத்திச் செல்லும் பொறுப்பில் இருந்துவரும் அமைச்சர்களும், நெசவுத் தொழிலுக்கு அடிக்கடி எங்கிருந்துத் தாக்குதல் வருகிறது என்பதைத் தெளிவாகத் தெரிந்திருப்பவர்களாக இருந்தும்கூட, அதைத் தடுத்து நிறுத்தக்கூடிய அதிகாரமற்றவர்களாய், திக்கற்ற நெசவாளியைப் போன்றே அவர்களும் சேர்ந்து கூக்குரல் எழுப்புகின்றனர்.

அவ்வாறு கூவுவதுடன் இருந்துவிடாது, நெசவுத் தொழிலைத் தாக்கித் தகர்த்து வரும் ஏற்பாடு குறித்துத் தெளிவுபடப் பேச முன்வருகிறார்கள்.

நமது நெசவுத் தொழிலுக்குக் கேடு சூழ்ந்துவரும் அப்பெரும் பகையை ஒழித்துக் கட்டவேண்டும் என்ற தங்கள் விருப்பத்தையும் ஒளிவு மறைவு இல்லாமல் உரைக்கின்றனர் அமைச்சர்கள்.

அதற்கான வகையை வரையறுத்தும் உரைக்கின்றனர்.

நமது கைநெசவுத் தொழிலுக்கு ஏற்பட்டுவரும் ஆபத்து குறித்தும், அதற்கான காரணம் குறித்தும், அதைக் களைந்தெறியும் முறை குறித்தும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளதைத்தான் துவக்கத்தில் தந்துள்ளோம்.

அவை நாம் கூறுவது போன்றே உள்ளன—ஆனால் நாம் கூறவில்லை அவற்றை.

அமைச்சர் ஒருவர் அவ்வாறு கூறியுள்ளார். அவ்வாறு அமைச்சர் குறிப்பிட்டிருப்பதும் ஒரு பொதுக்கூட்டத்தில் அல்ல—பொறுப்பான மேல் சட்டசபையில்.

தமிழகக் கைநெசவு வாழ்ந்து வளம்பெற வேண்டுமானால், வடநாட்டு ஆலைகளில் இருந்து இங்கு இறக்குமதி செய்யப்பட்டுவரும் ஆலைப்புடவைகளுக்கும் துணிகளுக்கும் தடை விதித்தாகவேண்டும்.

அதுவும் கண்டிப்பாகத் தடை விதித்தாகவேண்டும்—காங்கிரசு அமைச்சர் ஒருவர்தான், வடநாட்டு ஆலைப்புடவைகள் இங்கு இறக்குமதியாவதைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்கிறார்.

தமிழகத்தில் நெசவாளர்களுக்கு அடிக்கடி ஏற்படும் அல்லல், அமைச்சரை—அவர் ஒரு 'ஏக இந்தியா'வாக இருந்தாலும்கூட — 'வடநாட்டுத் துணிகள் தமிழகத்தில் இறக்குமதி ஆகாமல் தடுத்தாக வேண்டும்' என்று சொல்லவைக்கிறது!

இத்துறையில், 'தமிழகத்தைத் தனியாக விட்டுவிடுங்கள்' என்னும், காங்கிரசு அமைச்சரையே துணிந்து பேசச் சொல்லுகிறது.

வடநாட்டு ஆலைப் புடவைகளும் துணிகளும் தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப்படாமல் தடுக்கப்படக்கூடிய நிலை ஏற்படுமானால், கைநெசவுத் தொழிலை நிலையான அஸ்திவாரத்தில் நிர்மாணிக்க முடியும்—நிச்சயமாக முடியும் என்றும்கூடக் காங்கிரசு அமைச்சர் அழுத்தம் திருத்தமாக அறிவிக்கிறார்.

வடநாட்டுத் துணிகள் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்படுவதைத் தடுத்தால்அல்லாது, நெசவுத் தொழிலுக்குப் பாதுகாப்பு ஏற்படுத்த முடியாது. நெசவாளர்களுக்கும் நிரந்தரமான வாழ்வு கிடைக்காது—என்ற பேருண்மையைக் காங்கிரசு அமைச்சர் ஒருவர் கூறும்பொழுது மட்டும், எவருக்கும் அது தேசத் துரோகமாகப் படுவதில்லை. இதைக் கூறியுள்ள அமைச்சரேகூட, தமது கூற்றை தேசத் துரோகம் எனக் கருதுவதில்லை.

ஆனால், அதையே நாம் கூற முன்வந்தால், அதைத் துரோகம் என்கின்றனர்—துவேஷம் என்கின்றனர்—வடநாடு-தென்னாடு எனப் பிரித்துப் பார்க்கும் பேதபுத்தி என்கின்றனர்! அவ்வாறு கூறுகின்றவர்களுக்கு, காங்கிரசு அமைச்சர் ஒருவர் கூறியுள்ள மேற்படி கருத்துரைகளை அர்ப்பணிக்கின்றோம்.

அமைச்சரேகூட, அவர் அந்த நாள் கூறிய அக்கருத்துரைகளை இந்தத் தேர்தல் நேரத்தில் மீண்டும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நமது நிதி அமைச்சர் சுப்பிரமணியனார் அவர்கள்தான், சென்னை மேல் சபையில்,

'இறக்குமதியைத் தடுக்கவேண்டும்;'

'எங்களைத் தனியாக விட்டுவிடுங்கள்;'

'ஆங்காங்கு உற்பத்தியாவதை அந்தந்த மாநிலங்களே பயன் படுத்திக்கொள்ளட்டும்;'

'நாங்கள் சமாளித்துக்கொள்ள முயற்சிப்போம்;'

'கைத்தறித் தொழிலை எங்களால் நிலை நிறுத்திக்கொள்ள முடியும்;'

'இக்கோரிக்கையை இந்திய அரசாங்கத்திடம் வற்புறுத்த சட்டசபை உறுப்பினர்கள் ஒத்துழைக்கவேண்டும்—ஆதரிக்கவேண்டும்;' என்று குறிப்பிட்டார்.

அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கோருவதுபோல், சட்டசபையில் வலிமை மிகுந்த எதிர்க்கட்சியாக வீற்றிருக்கப் போகும் நமது முன்னேற்றக் கழகம் இதுபோன்ற கோரிக்கைகளில் இந்திய அரசாங்கத்தை வற்புறுத்துவதில், ஒத்துழைக்கும்—ஆதரவளிக்கும்.

எனவே, நெசவாளப் பெருங்குடிமக்கள், நமது கழக அபேட்சகர்களை ஆதரிக்க வேண்டும்; ஆதரித்தே தீருவர் என்ற திட நம்பிக்கை நமக்கு உண்டு.

இவ்வாறு சட்ட சபையிலேயே உரிமை உணர்வுடன் பேசுவதாகப் பிறர் நம்பட்டும் எனப் பேசிய அதே அமைச்சர்தான், இப்பொழுது தேர்தல் நேரத்தில், முரண்பட ஏதேதோ பேசிவருகிறார். ஐயோ பாவம்!

# வாக்குப் பதிவு செய்வது எப்படி?

## விபரங்களை மக்களுக்கு தோழர்கள் விளக்கிக் காட்டல் வேண்டும்

வாக்குப் பதிவு நிலையங்களில் வாக்காளர் காத்து நிற்கவேண்டிய இடத்துக்கு அழைத்துச் செல்லப்படுவார். அங்கே 'கியூ' வரிசை இருந்தால் அதில் அவரும் வரிசையாய் நிற்க வேண்டும். ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித் தனியாகப் பதிவு நிலையங்கள் இல்லாத இடங்களில் ஆண்கள் வரிசையும் பெண்கள் வரிசையும் தனியாக இருக்கும். ஆண்களும் பெண்களும் மாறி மாறி பதிவுச் சாவடிக்குள் அனுமதிக்கப்படுவார்கள். பலவீனமான வாக்காளர்களுக்குச் சலுகையாக முதலில் வாக்களிக்க வசதி செய்யப்படும்.

'கியூ' வரிசையில் நிற்கும் போதே அங்கு தேர்தலில் போட்டியிடுகிற அபேட்சகர்களின் பெயர் வரிசைப் பட்டியலையும் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள அடையாளச் சின்னங்களையும் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம். அவை அங்கே காட்டப்பட்டிருக்கும். 'கியூ' வரிசையில் நிற்கும்போது, வாக்குச் சீட்டை வாக்குப் பெட்டிக்குள் எப்படி சுலபமாக போடுவது என்பது பற்றி விளக்கப்படும்.

வாக்காளர் வாக்குச் செய்ய வேண்டிய இடத்திற்கு வந்ததும், அவர், அபேட்சகர்களிடமிருந்து முன்னதாக ஏதாவது அடையாளச் சீட்டைப் பெற்றிருந்தால் அதைக் கொடுப்பார். வாக்குப் பதிவு அதிகாரி, அவருக்கு அதிகாரபூர்வமான அடையாளச் சீட்டைத் தருவார். அதில் வாக்காளர் பட்டியலில் அவர் பெயருக்கெதிராகக் காணப்படுகிற வரிசை எண் கண்டிருக்கும். அந்த அதிகாரபூர்வமான அடையாளச் சீட்டுடன் அவர் வாக்குப் பதிவாகும் இடத்திற்குச் செல்வார்.

வாக்குப் பதிவாகும் இடத்தில் வாக்குப் பதிவு அதிகாரியொருவர் அவரது அடையாளச் சீட்டைச் சரிபார்ப்பார். மற்றொரு அதிகாரி அவரது இடது கை சுட்டுவிரலில் அழியாத மையினால் ஒரு அடையாளமிடுவார். அதன்பின் சட்ட சபைக்கான வாக்குச் சீட்டை அவரிடம் தருவார். வாக்காளர் முதலில் அதனை பதிவு செய்யவேண்டும். அந்தத் தொகுதியில் இரண்டு இடங்களுக்கு வாக்களிக்கவேண்டியிருந்தால், அவரிடம், இரண்டு வாக்குச் சீட்டுகள் தரப்படும். அச்சீட்டுக்களை அவர் இரண்டு தனித் தனிப் பெட்டிகளில் போடவேண்டும்.

ஒரே பெட்டியில் இரண்டு சீட்டுகளையும் போட்டால், வாக்குகள் எண்ணப்படும்போது ஒரு வாக்குதான் பதிவு செய்யப்படும். மற்றொரு வாக்குச் சீட்டு செல்லாதென்று தள்ளிவிடப்படும். அந்த வாக்குச் சீட்டுகளை அவர் எந்த இரண்டு பெட்டியிலாவது போடலாம்.

இலட்சம் பேருக்கு மேற்பட்ட மக்கள் தொகையுள்ள நகரங்களில் ஆள்மாறாட்டங்கள் நடைபெறாமல் தடுப்பதற்காக விசேட ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. அந்த வாக்குப் பதிவு நிலையங்களில் தலைமை வகிக்கும் அதிகாரிகள், ஒவ்வொரு வாக்காளரும் அதிகாரபூர்வமான அடையாளச் சீட்டில் கையெழுத்திடவோ அல்லது விரல் அடையாளம் வைக்கவோ சொல்வார். அவ்வாறு செய்த பின்தான் வாக்காளரிடம் அவர் வாக்குச் சீட்டைத் தருவார்.

வாக்காளர் வாக்குச் சீட்டைப் பெற்றபின், சட்டசபை அபேட்சகர்களுக்கான வாக்குப் பெட்டிகள் வைக்கப்பட்டுள்ள அறைக்காவது, மறைவிடத்துக்காவது செல்லவேண்டும். அதற்குள் புகும்போது அவர், அதிகாரபூர்வமான அடையாளச் சீட்டை அங்கே நிற்கிற வாக்குப் பதிவு உதவியாளரிடம் கொடுத்துவிட வேண்டும். வாக்குப் பெட்டிகள் உள்ள அறையில் தேர்தலில் போட்டியிடுகிற எல்லா அபேட்சகர்களின் வாக்குப் பெட்டிகளும் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு அபேட்சகரின் வாக்குப் பெட்டியிலும் அவருக்குள்ள அடையாளச் சின்னம் ஒட்டப்பட்டிருக்கும். அந்தச் சின்

(4-ம் பக்கம் பார்க்க)





# தேர்தல் நிதி தாரீர்!

| வரவு | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| 25—2—57 இதழ்ப்படி ... | 60,411 | 0 | 7 |
| மலேயா, கொலான்ஜொகூர்—என். முத்துசாமி ... | 86 | 2 | 0 |
| காஞ்சீபுரம் நகர செயலாளர் திரு. வெங்கடேசன் மூலம் (முன் வெளியிட்ட விவரப்படி) ... | 240 | 0 | 0 |
| சிதம்பரம்—மடுவங்கரை தில்லைவிடங்கன் மா. பாலசுப்பிரமணியன் ... | 2 | 0 | 0 |
| சிதம்பரம்—தள்ளிகாட்டுமேத்துத் தெரு சோ. ஆறுமுகம் ... | 3 | 0 | 0 |
| நெல்லை—தச்சநல்லூர் க. சண்முகம் ... | 1 | 0 | 0 |
| சேலம்—தர்மபுரி தி. மு. கழகம் எஸ். ஜே. காளிதாஸ் ... | 4 | 15 | 0 |
| கவசம்பட்டு தி. மு. கழகம்—ம. வில்வநாதன் மூலம் ... | 25 | 0 | 0 |
| சென்னை—லால்பீகம் தெரு சாய்மூர்த்தி ... | 5 | 8 | 0 |
| தக்கோலம் தி. மு. கழகம்—மு. செ. சுப்பிரமணியன் மூலம் ... | 39 | 2 | 0 |
| வெள்ளக்கோயில்—நாச்சிப்பாளையம் தி. மு. கழகம்—நா. மு. சாமியப்பன் மூலம் ... | 10 | 0 | 0 |
| திருத்துறைப்பூண்டி—சேகல்மாடப்புரம் தி. மு. கழகம்—என். வி. வேதலிங்கம் மூலம் ... | 12 | 0 | 0 |
| தப்பாகிளை—அமதசங்கம்—அ. பழனியாண்டி மூலம் ... | 1 | 6 | 0 |
| சென்னை மத்திய இரயில்வே நிலைய பாதுகாப்பு ஊழியர்கள்—மதுரை-இ. ரெ. இராமைப்பித்தன் மூலம் ... | 10 | 0 | 6 |
| மதுரை—சமயநல்லூர் தி. மு. கழகம் ... | 10 | 0 | 0 |
| பம்பாய்—தபால் பெட்டி எண் 756, சி. என். கிருட்டிணன் ... | 5 | 0 | 0 |
| பெங்களூர்—சீராமபுரம் தி. மு. கழகம்—சு. கண்ணன் மூலம் ... | 25 | 0 | 0 |
| பாண்டிச்சேரி—முதலியார்பேட்டை தி. மு. க. நண்பர்கள் ... | 51 | 0 | 0 |
| தென்னாற்காடு—சிமுட்லூர் தி. மு. கழகம் ... | 50 | 0 | 0 |
| தஞ்சாவூர்—ரெண்டாங்காடு தி. மு. கழகம்—அ. கனகசபை மூலம் ... | 25 | 0 | 0 |
| கௌரி சுருட்டு (மார்க் பாக்கிங் டிபார்ட்மெண்ட்) தொழிலாளர்கள்—வி. துரைசாமி மூலம் ... | 4 | 12 | 3 |
| மேற்படி சுருட்டு கம்பெனி தொழிலாளர்கள் தோழர் பி. சுப்பராயன் மூலம் ... | 5 | 8 | 0 |
| சாவி மார்க் சுருட்டு தொழிலாளர்கள் வரதன் மூலம் ... | 4 | 12 | 0 |
| அமிஞ்சிகரை—'தூக்குமேடை' நாடகத்தில் உண்டியல் மூலம் ... | 7 | 8 | 0 |
| சென்னை—பூங்காநகர் வள்ளுவர் மன்றம் ... | 50 | 0 | 0 |
| கோவை—பாப்பாநாய்க்கன்பாளையம் தி. மு. கழகம் ... | 47 | 5 | 0 |
| மதுரை—புதூர்-ஆர். கணேசபாண்டியன் ... | 1 | 0 | 0 |
| மதுரை—மேலூர் ('திராவிட நாடு' விற்பனையாளர்) எம். முத்து ... | 6 | 1 | 0 |
| திருவண்ணாமலை—தி. மு. க. (மாணவர் கிளை) ப. சிவப்பிரகாசம் மூலம் ... | 5 | 0 | 0 |
| பாலக்காடு—முற்போக்கு வாலிபர் மன்றம் ... | 56 | 9 | 3 |
| கல்லார் எஸ்டேட் சோலையார்—தி. மு. கழகம் கே. ம. பிச்சைமுகமது மூலம் ... | 10 | 0 | 0 |
| சென்னை-5. ஆர். முருகேசன் ... | 2 | 0 | 0 |
| முத்துப்பேட்டை தி. மு. கழகம் ப. கணபதி மூலம் ... | 10 | 0 | 0 |
| வட ஆற்காடு—தேசூர்சியாமங்கலம் தி. மு. கழகம்—கே. பெருமாள் மூலம் ... | 5 | 0 | 0 |
| மதுரை—சித்தையன்கோட்டை எம். காசி ... | 1 | 0 | 0 |
| நிலைமையாளன் ... | 1 | 0 | 0 |
| வார இதழ் விற்று எம். எஸ். ராதா ... | 2 | 8 | 0 |
| நெல்லை—அரசூர் பூச்சிக்காடு தி. மு. கழகம் ... | 10 | 0 | 0 |
| இராமநாதபுரம் ஆர். இராசன் ... | 5 | 0 | 0 |
| விருதுநகர்—கல்லூரி உணவு விடுதி கா. வை. வேலாயுதம் ... | 201 | 0 | 0 |
| சிலோன் கே. கைலாசப்பிள்ளை ... | 1 | 4 | 0 |
| மலேயா—கிரிகிரோட்டு வ. சண்முகம், கு. குப்பையன் ... | 15 | 0 | 0 |
| ஐதராபாத்—வி. சிவா ... | 44 | 4 | 0 |
| பூதபாண்டிபுதூர்—சு. மாடசாமி பணிக்கர் ... | 5 | 0 | 0 |
| பாலக்காடு—ஏ. பி. பாலசுப்பிரமணியம் ... | 1 | 0 | 0 |

ஆக மொத்தம் ரூ. **61,519-9-7**

நிதி அனுப்பிவைக்க வேண்டிய முகவரி:—

பொதுச்செயலாளர்—தி. மு. கழகம், 'அறிவகம்', இராயபுரம், சென்னை-13.

# சுதந்திர ஆட்சியின் இலட்சணம்!

"பொதுத் தேர்தலின்போது வாக்குப் பெட்டிகளில் சின்னங்கள் பொறிக்கும் முறையானது பெரும்பாலான மக்கள் கல்விகற்காதவர்கள் என்பதை நமக்கு நினைவூட்டுகிறது.

"பல்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்த அபேட்சகர்களுக்காகப் பல தேர்தல் சின்னங்கள் இருக்கின்றன. இந்த முறை நீடிப்பது நல்லதல்ல; நாட்டில் மக்கள் அனைவரும் கல்வி கற்றவர்களாக இருக்க வேண்டும்."

—பொதுக்கூட்டமொன்றில் பண்டித நேரு

# பட்டி தொட்டியெங்கும் கழக முழக்கம்

## பல தொகுதிகளிலும் தோழர்களின் தீவிரப் பணி

பொதுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் போட்டியிடுவதையொட்டி, இதுவரை தி. மு. கழகம் நாட்டு மக்களுக்குச் செய்துள்ள தொண்டுகளையும் இனிமேலும் செய்யப்போகிற ஆக்க வேலைகளை எடுத்துக்காட்டியும் தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட்டாக வேண்டிய நிலைமைகளை விளக்கியும் நாட்டில் சீர்குலைந்து கிடக்கும் ஜனநாயகம் உருப்பெற தி. மு. கழகத்தைப் பொதுமக்கள் ஆதரித்தாக வேண்டிய நிலையை விளக்கியும் நாடு முழுமையிலும் தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள் ஆகியவை போன்ற ஆக்க வேலைகளில் கழகத் தோழர்கள் தீவிரமாக ஈடுபட்டுவருகின்றனர். அவை பற்றிய விவரங்கள் இங்கு சுருக்கமாகத் தரப்படுகின்றன:—

**அரவக்குறிச்சி:**

கடந்த 13-ந்தேதி யன்று இரவு, அரவக்குறிச்சியில் மாபெரும் தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு கன்னிவாடி கே. எஸ். எஸ். பெரியார் தலைமை வகித்தார்.

தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள், கழகத்தின் தேர்தல் ஈடுபாட்டினால் பீதிகொண்டுள்ள காங்கிரசின் நிலையை விவரித்து தென்னாடு வடநாட்டால் புறக்கணிக்கப்படுகின்ற விதங்களை விளக்கி சொற்பொழிவாற்றினார்.

**நாகூர்:**

17-2-57 இரவு 10-30 மணிக்கு, நாகூர் போலீஸ் திடலில் தோழர் யூசுப் ரகமதுல்லா தலைமையில் தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் பலர் உரையாற்றினர்.

இறுதியில் தோழர் கண்ணதாசன் காங்கிரசார், கம்யூனிஸ்டுகளின் போக்கைக் கண்டித்தும் இத்தொகுதியில் பாராளுமன்றம் சட்டசபைக்கு முறையே போட்டியிடும் தோழர்கள் மனோகரன், நாகூர் அனீபா ஆகியோரை பொது மக்கள் ஆதரிக்குமாறு கேட்டுக்கொண்டு சொற்பொழிவாற்றினர்.

**குன்னத்தூர் (நெல்லை):**

10-2-57 காலை 10 மணிக்கு குன்னத்தூர் தி. மு. கழகக் கொடியேற்று விழா தோழர் குறள் தலைமையில் நடைபெற்றது. தோழர் கே. ஆர். பி. மணிமொழியன் கழகக் கொடியை ஏற்றுவித்து தி. மு. கழகத்தின் நற்பணிகளை எடுத்துரைத்து தேர்தலில் கழக அபேட்சகர்களை வெற்றிபெறச் செய்யும்படி கேட்டுக்கொண்டார்.

**ஆயக்கரன்புலம்:**

15-2-57 மாலை 6மணிக்கு ஆயக்காரன்புலம் ஊராட்சி மன்றத் தருகில் தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் தர்மலிங்கம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் ந. தருமலிங்கம், எம். அம்பிகாபதி ஆகியோர் பேசிய பின்னர், தோழர் நாஞ்சில் கி. மனோகரன் அவர்கள் தேர்தல் குறித்தும் கழக இலட்சியங்களை விளக்கியும் அரியதோர் சொற்பொழிவாற்றினர்.

**கடையநல்லூர்:**

5-2-57 இரவு 8 மணியளவில் மறுமலர்ச்சித் திடலில் கடையநல்லூர் நகர தி. மு. கழகத் தேர்தல் பிரச்சார துவக்க விழா கூட்டம் தோழர் சி. நடராசன் தலைமையில் நடைபெற்றபோது தோழர்கள் பி. ஆறுமுகம், சாகுல் அமீது, சேதுராசு, சி. சண்முகம் ஆகியோர் பேசினர்.

**குளத்துப்பாளையம்:**

3-2-57 அன்று குளத்துப்பாளையத்தில் தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக்கூட்டம் தோழர் கருப்பண்ணன் தலைமையில் நடைபெற்றபோது தோழர்கள் எம். கே. கரிகாலன், வி. கே. இராசு, நாவரசன், வை. இரத்தினவேலு, எம். குழந்தைவேல் ஆகியோர் பேசினர்.

**பாப்பான் சத்திரம்:**

8—2—57 இரவு 7 மணிக்கு பாப்பான் சத்திரத்தில் தி. மு. கழகத் தேர்தல் பொதுக்கூட்டம் தோழர் தி. ந. சம்பந்தம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் இராம. அரங்கண்ணல், அ. பொன்னம்பலனார், சின்னச்சாமி ஆகியோர் பேசினர். தேர்தல் நிதிக்கு ரூ. 10 தரப்பட்டது.

**திருமழிசை:**

7—2—57 இரவு 7 மணிக்கு, திருமழிசை தி. மு. கழகத் தேர்தல் பொதுக்கூட்டம் தோழர் டி. கே. போரூரான் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் தி. ந. சம்பந்தம், முருகேசன், ஆர். எஸ். பாண்டியன், அ. பொன்னம்பலனார், சி. வி. எம். அண்ணாமலை ஆகியோர் பேசினர்.

**புஞ்சை சங்கேந்தி:**

4—2—57 மாலை 6 மணிக்கு, புஞ்சை சங்கேந்தி தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் எஸ். பி. முத்துசாமி தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் மு. கருணாநிதி, அன்பில்-தருமலிங்கம், மு. க. து. நடராசன், வெ. ந. முத்தமிழ்ச் செல்வன் ஆகியோர் பேசினர்.

**சுங்குவார்சத்திரம்:**

9—2—57 இரவு 7 மணிக்கு ஸ்ரீபெரும்புதூர் தொகுதி சுங்குவார்சத்திரம் தி. மு. கழகச் சார்பில் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் தி. ந. சம்பந்தம் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் ஆர். எஸ். பாண்டியன், அ. பொன்னம்பலனார், சி. வி. எம். அண்ணாமலை ஆகியோர் பேசினர்.

**தீர்த்தகரையம்பட்டு:**

19—2—57 மாலை 6 மணிக்கு தீர்த்தகரையம்பட்டு (செங்குன்றம் அருகில்) தேர்தல் பிரச்சாரக் குழுச் சார்பில் பொதுக்கூட்டம் தோழர் பி. சுந்தரமூர்த்தி தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் டி. சண்முகம், எம். எல். ஏ., மா. பொ. வேதாசலம், ஏ. கெங்காதரம், எஸ். கெங்காதரம், போகேந்திரன் ஆகியோர் பேசினர்.

**திருக்கோட்டியூர்:**

20—2—57-ந் தேதியன்று திருக்கோட்டியூர் தேரோடு வீதியில் தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் இராசகோபால் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் முனியாண்டி, கதிரேசன், அ. குருசாமி ஆகியோர் பேசியபின், தோழர் எஸ். எஸ். தென்னரசு தி. மு. கழகத் தேர்தல் கொள்கைகளை விளக்கமாக எடுத்துரைத்தார்.

**பழைய ஆயக்குடி:**

16-2-57 இரவு 7-30 மணிக்கு, பழைய ஆயக்குடி பெருமாள் கோவில் திடலில் தி. மு. கழகத் தேர்தல் பிச்சாரக் கூட்டம் தோழர் சி. இராசு தலைமையில் நடைபெற்றது. தோழர் வசனப்பித்தன் கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசிய பின் தோழர் கரிகாலன்—தோழியர் இராணி குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

* * *

17.2-57 இரவு 7-30 மணிக்கு, பழைய ஆயக்குடி பெருமாள் கோவில் திடலில் தி. மு. கழகத் தேர்தல் கூட்டம் தோழர் கு. நாராயணசாமி தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் சண்முகம், சி. அன்புப்பழம் ஆகியோர் பேசியபின், தோழர் கரிகாலன்—தோழியர் இராணி குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது. செயலாளர் நன்றி நவில கூட்டம் இனிது முடிவுற்றது.

**திருப்புத்தூர்:**

21—2—57 இரவு 9 மணியளவில் திருப்புத்தூர் தி. மு. கழகத் தேர்தல் அலுவலகத்திற்கு முன் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் பெரி. அழகு தலைமையில் நடைபெற்றது.

தோழர் எஸ். எஸ். தென்னரசு பேசியபின், தோழர் கண்ணதாசன் அவர்கள் தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட்டிருப்பதின் நோக்கத்தையும், இன்றைய அரசியல் நிலையையும் விளக்கி அரியதோர் சொற்பொழிவாற்றினர்.

**சென்னை 7-வது வட்டம்**

27—1—57 மாலை 6½ மணியளவில் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை லாயர் சின்னதம்பி முதலி தெருவில், தோழர் என். வி. நடராசன் அவர்களை ஆதரித்து, 7-வது வட்டத் தி. மு. கழகச் சார்பில் தோழர் லா. கணேசன் தலைமையில் தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் இராதாமாணிக்கம் இயக்கப் பாடல் பாடினர்.

தோழர்கள் என். வி. நடராசன், டி. கே. சீனிவாசன், காஞ்சி-கல்யாணசுந்தரம், வெ. த. இன்மொழியன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

# 'அழுகிய கனி'என அறிந்த பின்னரும்!

சென்னை, பிப். 26—

"காங்கிரஸ் ஆட்சி செலுத்திய காலத்தில் காணப்படும் சில குறைகளைப் பொருட்படுத்தாமல், வரும் பொதுத் தேர்தலில் காங்கிரசுக்கே மக்கள் வாக்களிக்க வேண்டும்,' என்று டி. டி. கிருஷ்ணமாச்சாரி, தேர்தல் கூட்டமொன்றில் கேட்டுக் கொண்டாராம்!

# வெற்றி கிட்டும் வரை படையெடுக்கலாம்

## ஆந்திரத்தில் எஸ். எஸ். எல். சி. பரீட்சை முறை

கர்னூல், பிப். 23—

எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் தேர்வு பெற மூன்று முறைகள் மட்டுமே மாணவர்கள் இதுவரையில் அனுமதிக்கப்பட்டு வந்துள்ளனர். இந்த வரம்பை நீக்கி எத்தனை முறை வேண்டுமானாலும் பரீட்சை எழுதலாம் என்று ஆந்திர அரசாங்கம் அறிவித்துள்ளது.

# மின் அணு விசையால் இயங்கும் கடிகாரம்

## பிரிட்டனிடமிருந்து இந்தியா வாங்குமாம்

மின் அணுவிசையால் இயங்கும் உயர்ந்த தோர் கடிகாரத்தை பிரிட்டனிலிருந்து இந்தியா வாங்கும். பிரிட்டன் தயாரிக்கும் இந்தக் கடிகாரத்தில் சிறு தவறும் நேரிடாதாம். ஆனால், நூறு ஆண்டுகளுக்கு ஒரு வினாடி விகிதத்தில் முன்பின் போகக் கூடிய தவறு நேரிடக்கூடுமாம்.

# இலட்சணமேஇலட்சணம்

## குடியிருப்பு வசதிக்கு சென்னை மாநிலத்திற்கு கிடைக்கும் தொகை

புதுடில்லி, பிப். 25—

இந்திய சர்க்கார், குறைந்த வருமானப் பிரிவினர் குடியிருப்பு வசதித் திட்டத்தின்கீழ், அசாம் சென்னை மாநிலங்களுக்குக் கடனாக மொத்தம் ரூ. 17,34,900 வழங்கியுள்ளனராம்.

இதில் அசாம் மாநிலத்திற்கு ரூ. 10,13,000; சென்னை மாநிலத்திற்கு ரூ. 21,009 வழங்கப்பட்டிருக்கிறதாம்.

★★★★★★★★★★★★★★★★★



★★★★★★★★★★★★★★★★★

## எம். ஜி. ராமச்சந்திரன்

சுற்றுப்பயணம்

கழகத் தோழர்களுக்கு அறிவிப்பு

★

புரட்சி நடிகர் எம். ஜி. ராமச்சந்திரன் அவர்களது சுற்றுப் பயணத்தின்போது, கழகத் தோழர்கள், ஒரு தொகுதியில் ஒன்று அல்லது இரண்டு கூட்டங்களுக்கு மட்டுமே ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம். திட்டமிட்டுள்ளபடி, எல்லாத் தொகுதிகளுக்கும் செல்லவேண்டியிருப்பதாலும் அவர் உடல்நலக் குறைவுற்றிருப்பதாலும், அதற்குமேல் அதிகமாக நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம்.

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

புரட்சி நடிகர்

## எம். ஜி. ராமச்சந்திரன்

சுற்றுப் பயணம்

★

**பிப். 28:**
மேலூர், லால்குடி, தஞ்சை, பட்டுக்கோட்டை, அதிராம் பட்டினம்.

**மார்ச் 1:**
காலை: சென்னை வருகை, மாலை: ஸ்ரீபெரும்புதூர், காஞ்சிபுரம் தொகுதிகள்.

**மார்ச் 2:**
தென்னாற்காடு மாவட்டத் தொகுதிகள்.

**மார்ச் 3:**
சேலம் தொகுதிகள்.

**மார்ச் 4:**
வட ஆற்காடு மாவட்டத் தொகுதிகள்.

**மார்ச் 5—6:**
சென்னை நகரத் தொகுதிகள்.

**மார்ச் 7:**
கரூர், அரவக்குறிச்சி தொகுதி

**மார்ச் 8:**
குளித்தலைத் தொகுதி.

**மார்ச் 9:**
மதுரைத் தொகுதி.

## தென்னாப்பிரிக்க மக்கள்மீது தடியடி

### போலீசார் உத்தரவை மதிக்க மறுத்தனராம்

சேப்டவுன், பிப். 24—

கேப்டவுன் அருகே எங்கா என்ற இடத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஆப்பிரிக்க தேசிய ஸ்தாபனத்தின் கூட்டமொன்றில் திடீரெனப் போலீசார் 9 ஆப்பிரிக்கர்களைக் கைது செய்த பின் கூட்டத்தினரைக் கலைந்து செல்லுமாறு பலமுறை எச்சரித்தும் கூட்டம் கலையாததால் போலீசார் தடியடிப் பிரயோகம் செய்தனராம்.

★★★★★★★★★★★★★★★★★



★★★★★★★★★★★★★★★★★

# தேர்தல் கூட்டங்கள்

**கொருக்குப்பேட்டை**

27—2—57 மாலை 6 மணிக்கு, சென்னை - கொருக்குப்பேட்டை நமசிவாய முதலி தெருவில் திருவள்ளுவர் முன்னணிக் கழகச் சார்பில் பேசின்பிரிட்ஜ் தொகுதி அபேட்சகர் தோழர் என். வி. நடராசன் அவர்களை ஆதரித்து தோழர் பி. கோதண்டராமன் தலைமையில் நடைபெறும். தேர்தல் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் க. அன்பழகன், ஏ. எஸ். வேலு, பி. எம். கருணாகரன் (தெலுங்கில்), சிட்டிபாபு ஆகியோர் பேசுவர்.

**தண்டையார்பேட்டை**

28-2-57 மாலை 6 மணிக்கு சென்னை—தண்டையார்பேட்டை சிங்காரவேலர் திடலில் (ஐ. டி. ஆஸ்பத்திரி அருகில்) 1-வது வட்ட கே. வி. சே. சாமி படிப்பகச் சார்பில் தி. மு. கழக அபேட்சகர் என். சிவரத்தினம் அவர்களை ஆதரித்து தேர்தல் கூட்டம் தோழர் கே. எம். கண்ணபிரான் தலைமையில் நடைபெறும். தோழர்கள் டி. பி. சுந்தரம், கோவிந்தராசன், அன்புரோசு, சந்தியநாதன் ஆகியோர் பேசுவர். தோழர் இராதாமாணிக்கம் இயக்கப்பாடல்கள் பாடுவார்.

**சிந்தாதிரிப்பேட்டை:**

28-2-57 மாலை 6 மணிக்கு சென்னை— சிந்தாதிரிப்பேட்டை பி. முனுசாமி ஞாபகார்த்த மன்றச் சார்பில் பாலகிருஷ்ணப் பிள்ளை தெருவில் தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி தலைமையில் தி. மு. கழகத் தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், ஏ. கே. வில்வம், ஆர். நாகலிங்கம், ஏ. ஏ. கபாலமூர்த்தி, தோழியர் அமுதா ஆகியோர் பேசுவர்.

**சென்னை-திருவொற்றியூர்**

28—2—57 மாலை 6 மணிக்கு, சென்னை - திருவொற்றியூரில், தி. மு. கழக சட்டசபை அபேட்சகர்கள் டி. சண்முகம், ஓ. செங்கம் தி. மு. க. ஆதரவு பெற்ற டில்லி மக்கள் சபை அபேட்சகர்கள் டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி, என். சிவராஜ் ஆகியோரை ஆதரித்துத் தேர்தல் கூட்டம் தோழர் மா. வெ. அன்பெழிலன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி, ஏ. கே. வில்வம் ஆகியோர் பேசுவர்.

**சென்னை - இராயபுரம்**

28—2—57 மாலை 6-30 மணியளவில் சென்னை - இராயபுரம் பனைமரத் தொட்டி அம்மன் கோவில் மைதானத்தில், சிங்காரவேலர் பகுத்தறிவு மன்றச் சார்பில் தி. மு. கழக அபேட்சகர் தோழர் என். சிவரத்தினம் அவர்களை ஆதரித்து தோழர் கே. குப்புராசு தலைமையில் நடைபெறும். தேர்தல் கூட்டத்தில் தோழர்கள் ஏ. வி. பி. ஆசைத்தம்பி, ஏ. கே. வில்வம், சந்தியநாதன், அன்புப் பழம் நீ, அன்புரோஸ், நீ. ந. மதிவாணன் ஆகியோர் பேசுவர். தோழர் இராதாமாணிக்கம் இயக்கப் பாடல்கள் பாடுவார்.

**மு. நகர்**

1—3—57 மாலை 5 மணிக்கு, முருகூரில் தோழர் ஆதிமூலம் அவர்களை ஆதரித்து சைக்கிள் ஊர்வலமும் தேர்தல் கூட்டமும் நடைபெறும். தோழர்கள் ஆதிமூலம், இரா. இளமுருகு, தி. இராமசாமி ஆகியோர் பேசுவர்.

**மதுரவாயல் கிராமம்**

28-2-57 மாலை 6 மணிக்கு மதுரவாயல் கிராமத்தில், ஈசுவரன் கோயில் எதிரிலுள்ள திடலில் தோழர் டி. சண்முகம் தலைமையில் தி. மு. கழகத் தேர்தல் பொதுக்கூட்டம் நடைபெறும். நடிப்பிசைப்புலவர் கே. ஆர். ராமசாமி, தோழர்கள் ஒளியன், சனகன் ஆகியோர் பேசுவர்.

# 'சர்க்காரிடம் நாங்கள் ஒன்றும் பிச்சை கேட்கவில்லை'

## ஊழியர்கள் மனக் கொதிப்பு

இடைக்கால நிவாரணம் என்ற பெயரால், சர்க்கார் ஊழியர்களுக்குத் தருவதாகக் கூறியுள்ள கிராக்கிப்படி உயர்வு மிகக் குறைந்தது என்றும் இது தங்களுக்குப் பெரும் அதிருப்தியையே தந்திருப்பதாகவும் ஊழியர் சங்கத்தவர் கருத்தறிவித்திருக்கின்றனர்.

சர்க்கார் ஊழியர் சங்க மத்திய கமிட்டியும், தலைமை அலுவலக ஊழியர் சங்க செயற்குழுவும் கூட்டாக நடத்திய கூட்டத்தில் இந்தக் கருத்துக்கொண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

"என்றாலும், ஊழியர்கள் தேர்தல் நேரத்தில் நெருக்கடியான —இக்கட்டான நிலைக்கு சர்க்காரைத் தள்ள விரும்பாததால், நாங்கள் ஏற்கனவே, செய்திருந்த 'துக்கச் சின்னம்' அணிவது என்ற முடிவை அமுல் செய்யாமல் கைவிடுகிறோம். இது ஊழியர்களின் நல்லெண்ணத்தைக் காட்டுவதாகும்"

என்றும் ஊழியர் சங்கங்கள் கூறியிருக்கின்றன.

மத்திய சர்க்கார் ஊழியர்களுக்குத் தரப்படுவது போன்ற கிராக்கிப்படி உயர்வு தரவேண்டும் என்றும் கோரியிருக்கின்றனர்.

"எங்கள் கஷ்டங்களையும், துயரங்களையும் கடந்த 10 ஆண்டுகளாகக் கண்டுவரும் சர்க்கார், எங்களது குறைத் துக்கொள்ளவே முடியாத கோரிக்கைகளை ஏற்றுக்கொள்வதற்குப் பதிலாக ஏதோ பெயரளவில் பிச்சை போடுவது போன்று மீண்டும் சில ரூபாய் தருவதாகக் கூறுவது கண்டு வருந்துகிறோம்,"

என்றும் நிறைவேற்றப்பட்டுள்ள தீர்மானம் கூறுகிறது.

## காஞ்சி தொகுதியில் அண்ணா

நிகழ்ச்சிகள்

பிப். 28:
- மாலை 3 மணி: வளத்தூர் கிராமம்
- „ 5 மணி: புரிசை கிராமம்
- „ 6 மணி: காஞ்சிபுரம் ஒலிமுகமது பேட்டை
- இரவு 10 மணி: அடிசன் பேட்டை, செட்டித் தெரு

மார்ச் 1:
- மாலை 4 மணி: புள்ளலூர் கிராமம்
- „ 5 மணி: கோவிந்தவாடி கிராமம்
- இரவு 7 மணி: காஞ்சிபுரம் ரங்கசாமிகுளம்

(தோழர் முகவை ஆர். எஸ். பாண்டியன் கலந்துகொள்வார்)

மார்ச் 2:
- மாலை 6 மணி: காஞ்சிபுரம் செங்கை கொண்டான் மண்டபம்

[மார்ச் 2-ந் தேதி பொதுக் கூட்டத்தில் துணைப்பொதுச் செயலாளர் என். வி. நடராசன், டாக்டர் சர். ஏ. இராமசாமி ஆகியோர் கலந்து கொள்வர்.]

★★★★★★★★★★★★★★★★★



★★★★★★★★★★★★★★★★★

## எம். பி. வடிவேலு

அறிவிப்பு

வாணியம்பாடி சட்டசபைத் தொகுதியில் தி. மு. கழகச் சார்பில் போட்டியிடுகிற என்னைப் பற்றி, என் அனுமதியின்றி பிரசுரிக்கப்படும் விளம்பரங்கள், துண்டு அறிவிப்புகள், அறிக்கைகள் எதுவும் என்னைக் கட்டுப்படுத்தாது என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்,

எம். பி. வடிவேலு

**பரமக்குடி தி. மு. கழக பொது உறுப்பினர்கட்கு:**

1—3—57-ந் தேதியன்று பரமக்குடி தி. மு. கழகப் பணிமனையில் கழகத் தேர்தல் சம்பந்தமான பொது உறுப்பினர் கூட்டம் நடைபெறும் கிளைக் கழகத் தோழர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ளும்படிக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## கே. ஏ. மதியழகன்

சுற்றுப்பயணம்

மார்ச்
- 2 : மாலை 6 மணி லால்குடி இரவு 10 மணி திருச்சி
- 3 : சேலம்
- 5 : சென்னை
- 6 : சிதம்பரம்
- 7 : குளித்தலை
- 8 : மதுரை
- 9 : மாலை 6 மணி கோவை இரவு 10மணி வெள்ளலூர்
- 10, 11 : குளித்தலை, கரூர் பார்லிமெண்டரி தொகுதிகள்.

## பெரம்பூர் தொகுதி

தோழர்கட்கு:

சென்னை-பெரம்பூர் தொகுதியில் போட்டியிடுகின்ற தி. மு. கழக அபேட்சகர் தோழியர் சத்தியவாணிமுத்து அவர்களுக்கு சென்னை 23-வதுவட்ட தி, மு. கழகச் சார்பில் தேர்தல் அலுவலகம் ஒன்று 'எண் 3, சண்முகராயபிள்ளைத் தெரு (காகா தோப்பு) புரசைவாக்கம்' என்ற முகவரியில் அமைக்கப்பட்டுள்ளது. தேர்தல் சம்பந்தமாக தொடர்கொள்ள விரும்புவோர் மேற்குறிப்பிட்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

# வாக்குப் பதிவு செய்வது எப்படி?

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

னம் பொறிக்கப்பட்டுள்ள தாளில் அவரது பெயரும் பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருக்கும். வாக்காளர்கள், வாக்குச் சீட்டை மடிக்காமலும் கசக்காமலும் தங்களுக்குப் பிடித்தமான அபேட்சகரின் பெட்டியில், அந்தப் பெட்டியின்மேலே உள்ள துவாரத்தின் வழியாக வாக்குச்சீட்டைப் போட வேண்டும். துவாரம் இருப்பது நன்றாகத் தெரியும்படி வெள்ளைச் சாயம் அடிக்கப்பட்டிருக்கும். வாக்குப் பதிவு இரகசியத்தைப் பாதுகாப்பதற்காக வாக்குப் பெட்டிகள் இருக்கும் அறைக்குள் ஒரு சமயத்தில் ஒரே வாக்காளர்தான் அனுமதிக்கப்படுவார்.

சட்டசபைக்கான வாக்குப் பெட்டிகள் உள்ள அறையிலிருந்து வாக்காளர் வெளியே வந்தவுடன் வாக்குப் பதிவு உதவியாளரிடமிருந்து தமது அதிகாரபூர்வமான அடையாளச் சீட்டை மீண்டும் பெற்றுக்கொள்ளுவார். அதை பாராளுமன்றத் தேர்தலுக்கான வாக்குப் பதிவு அதிகாரியிடம் கொடுக்கவேண்டும். அந்த அதிகாரி மறுபடியும் அவரது பெயர் முதலியவற்றைச் சரிபார்த்து, அவர் விரலில் அழியாத மை அடையாளம் இருக்கிறதா என்று கவனிப்பார். எல்லாம் சரியாக இருந்தால் அவரிடம் பாராளுமன்றத் தேர்தலுக்கான வாக்குச் சீட்டைக் கொடுப்பார். அதைப் பெற்றுக்கொண்டு வாக்காளர் பாராளுமன்றத் தேர்தலுக்கு வாக்களிக்க வேண்டும்.

பாராளுமன்றத் தேர்தல் விஷயத்திலும் அந்தத் தொகுதியிலிருந்து இரண்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தால், அவரிடம் இரண்டு வாக்குச் சீட்டுகள் தரப்படும். அவைகளைப் பெற்றுக்கொண்டு அவர், இரண்டாவது அறைக்குள் சென்று பாராளுமன்ற அபேட்சகர்களின் வாக்குப் பெட்டிகள் வரிசையாக அடுக்கி வைத்திருப்பதைக் கவனித்து தமக்குப் பிடித்தமான அபேட்சகருக்கு வாக்குச் செய்ய வேண்டும். வாக்குப் பதிவு பூர்த்தியானவுடன் வாக்காளர் வாக்குச் சாவடியைவிட்டு வெளியே போய்விடவேண்டும்.

**இரட்டை உறுப்பினர் தொகுதிகள்**

ஒரு தொகுதியிலிருந்து மாநில சட்டசபைக்கோ அல்லது பாராளுமன்றத்திற்கோ இரண்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தால், அது சம்பந்தமான விசேஷ விதிகளை வாக்காளர் தெளிவாகத் தெரிந்து கொள்ளவேண்டும். அத்தகைய தொகுதிகளில் ஒரு இடம் தாழ்த்தப்பட்ட வகுப்பு அல்லது தாழ்த்தப்பட்ட குடிகளுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும். அத்தகைய ஒவ்வொரு தொகுதியிலும் வாக்காளரிடம் இரண்டு வாக்குச் சீட்டுகள் தரப்படும். மேலே கூறியதுபோல் அந்த இரு சீட்டுகளையும் இரு வேறு பெட்டிகளில் அவர் போட வேண்டும். ஒரே பெட்டியில் போட்டால் ஒரு சீட்டு வீணாகி விடும். வாக்கு கணக்கெடுப்பில் ஒன்று சேர்க்கப்பட்டு, மற்றொன்று நிராகரிக்கப்படும்.

ஏற்பாடுகள் எவ்வளவுதான் சிறப்பாக இருந்தாலும் அபேட்சகர்களும் வாக்காளர்களும் வாக்குப் பதிவு அதிகாரிகளுடன் பூரணமாக ஒத்துழைக்காவிட்டால் வாக்குப் பதிவு சுமுகமாகவும் நேர்மையாகவும் திருப்திகரமாகவும் நடக்கும்படி செய்வதில் தங்களுக்குள்ள பொறுப்பை ஏற்காவிட்டால், ஏற்பாடுகள் சரியாகப் பலன் தரமாட்டா. எனவே, வாக்காளர் வாக்குப் பதிவு அறைக்குள் சீக்கிரமாகத் தமது வாக்குச் சீட்டைப் பதிவு செய்துவிட்டு, பெட்டிகளை எந்த விதத்திலும் கலைக்காமல் வந்துவிட வேண்டும். வாக்களிக்க விரும்பாவிட்டால் வாக்குச் சீட்டுகளை வாக்குப் பதிவு அதிகாரியிடம் திரும்பக் கொடுத்துவிட வேண்டும். அதன்பின் வாக்குச் சாவடியை விட்டு வெளியே வந்துவிடவேண்டும். எந்தச் சந்தர்ப்பத்திலும் வாக்குச் சீட்டை ஓட்டுச் சாவடிக்கு வெளியே கொண்டுவரக்கூடாது. அது குற்றமாகும். அதற்குக் கடுமையான தண்டனை உண்டு.

★★★★★★★★★★★★★★★★★



★★★★★★★★★★★★★★★★★

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரிய நாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

